REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு

சோலைவனம்

ஏழை மக்களின் வாழ்வெனும் பாலைவனம் சோலைவனமாகிட-வருங்காலசந்ததிகளாவதுவளமெலாம் பெற்று வாழ்ந்திட வழிவகை செய்திடுவது பட்டதாரிகளின் முதற் பெருங்கடமையாகிறது.

-பேரறிஞர் அண்ணா




தொண்டு

தனி மதிப்பையும் ஆதரவையும் நான் வெறுக்கிறேன். மக்களுடன் பகிர்ந்து கொள்ள முடியாத எதையும் தேசதொண்டன் பெறக்கூடாது.

அண்ணல் காந்தி

மலர்: 3 (●) சென்னை 25—2—1979 ஞாயிறு (*)❋●❋(*) வெளியூர்: 26—2—1979 திங்கள் (●) இதழ்: 129

# வைர நெக்லஸ் புகார்: கருணாநிதிக்கு

# நாவலர் சவால்

காஞ்சிபுரம், பிப். 25-"வைரநெக்லஸ் வாங்கியதாக என்மீது கருணாநிதி குற்றம் சாட்டி வருகிறார். அப்படி செய்தி வெளியிட்டவர்கள் மீது வழக்குத் தொடர்ந்து நான் குற்றமற்றவன் என்று தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கிறது. கருணாநிதி மீது நாம் கூறிவரும் கோதுமை பேர ஊழல், பூச்சி மருந்து ஊழல் வீராணம் ஊழல்கள் தவறு என்று அவர் வழக்குத் தொடருவாரா?" என்று மக்களின் பலத்த கரவொலிக்கு இடையில் கழகப் பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் சவால் விடுத்தார்.

காஞ்சிபுரம் செங்கழுநீர் ஓடை வீதியில் பூ சத்திரம் அருகில்பிரும்மாண்டமான கழகப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு மா. அரங்கநாதன் தலைமை வகித்தார்.

கூட்டத்தில் கழகப் பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர், தாம்பரம் லட்சுமிமுத்து, காஞ்சி பன்னீர்செல்வம், புலவர் சகாதேவன், ஜோதி பாண்டியன், எஸ். ஜி. பெருமாள், வி. ராமன், வீரமணி ஜோதி, பால் செட்டி ஏ. ஆர். சபாபதி, ஆகியோர் பேசினர்.

டாக்டர் நாவலர் பேசும் போது கூறியதாவது:

"கழகப் பொதுச்செயலாளர் பொறுப்பை ஏற்ற பிறகு முதன்முறையாக இங்கே வந்திருக்கிறேன்.

அரசியலிலும் நல்லவர்கள் ஒதுங்க ஒதுங்க சின்னவர்கள் - சில்லரைகள் முன்னணியில் வருகின்றனர்.

கழகப் பொதுச்செயலாளர் பொறுப்பை ஏற்று நடத்துகிற ஆற்றல், அறிவு, துணிவு எனக்கு இருக்கிறதா என்று என்னை நானே கேட்டுக் கொள்கிறேன், இல்லை என்றுதான் என் மனம் சொல்கிறது.

ஆனால் இந்தபொறுப்பை ஏற்று நடத்துகிற அளவுக்கு புரட்சித் தலைவரின் இதயத்திலே இடம் பெற்றிருக்கிறேன் என்ற ஒரே காரணம்தான் பொறுப்பை ஏற்க வைத்திருக்கிறது. அதனால் தான் மன்றத் தோழர்களின், கழகத் தொண்டர்களின் அரவணைப்பைப்பெற்றிருக்கிறேன்.

அன்பர் நிலைக்கு தன்னை ஆளாக்கி விட்டால் இன்ப நிலை தானே வந்து எய்தும் என்றுதாயுமானவர்சொன்னார் கழகத்தின் பணிக்காக என்னை ஆளாக்கி விட்டால் இன்ப நிலை தானே வந்து விடும் என்ற எண்ணத்தில் கழகப் பொறுப்பை ஏற்று செயலாற்றவந்திருக்கிறேன்

## கருணாநிதியின் பண்பு?

பேரறிஞர் அண்ணா தன்னிடமிருந்து பொதுச் செயலாளர் பொறுப்பை என்னிடம் அளித்தார். புரட்சித் தலைவரும் நான் கேட்காமலேயே 72-ம் ஆண்டு முதல் 78ம் ஆண்டு வரை தான் வகித்து வந்த பொதுச் செயலாளர் பொறுப்பை ஒப்படைத்திருக்கிறார். கழகப்பொதுக் குழுவும் ஒருமனதாகத் தேர்ந்தெடுத்திருக்கிறது.

ஆனால், கருணாநிதி பேரறிஞர் அண்ணாவின் மறைவுக்குப் பின்னர் எனது பிறந்தநாள் அன்று எனக்கு மாலை அணிவித்து வாழ்த்து தெரிவித்தார். அதன் பின்பு பகல் 12மணி அளவில் பத்திரிகை நிருபர்களிடம், பொதுச்செயலாளர் பதவிக்கு என்னை எதிர்த்து போட்டியிடப் போவதாக அவர் அறிவித்தார்.

இதை ஏன் சொல்கிறேன் என்றால் புரட்சித் தலைவருக்கும் கருணாநிதிக்கும் உள்ள வேற்றுமையை எடுத்துக் காட்டுவதற்காகத் தான், பேரறிஞர் அண்ணாவின் கொள்கையைத் தவறாமல் கடைப்பிடித்து செல்பவர் புரட்சித்தலைவர் தான் என்பதற்காக.

'மன்றம்' பத்திரிகை வெளியீட்டு விழாவில் புரட்சித்தலைவர் பேசும்போது, 'நான் தவறு செய்தால் அதைத் தட்டிக் கேட்க வேண்டிய பொறுப்பு நாவலருடையது' என்றார்.

## தவறு செய்யாத தலைவர்

புரட்சித் தலைவர் தவறு செய்வாரா? அவரை நான் தட்டிக்கேட்க வேண்டிய காலம் வருமா? அண்ணா என்றைக்கும் தவறு செய்தவரில்லை. அவர் வழிவந்தபுரட்சித்தலைவரா தவறு செய்யப் போகிறார்? மன்றம்வெளியீட்டின்போது எனக்கு கழகத்தில் எந்தப் பொறுப்பும் இல்லாதகாலம் அப்போதே 'என்னை தட்டிக் கேட்டுதிருத்தவேண்டியவர் நீங்கள்' என்று சொன்னார்.

தந்தை பெரியாரும் பேரறிஞர் அண்ணாவும் விட்ட கருத்தைத் தொடர்ந்து செயலாற்றி கண்ட கனவுகளை நனவாக்க 20லட்சம் பேர்களும்ஒன்று சேர்ந்து புரட்சித்தலைவர் தலைமையில் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகமாக இருந்து பொது மக்களின் அரவணைப்பைப் பெற்று செயல்படுத்தி வருகிறோம்.

தந்தை பெரியார் கறைபடியாதகரத்துக்கு சொந்தக்காரர், பேரறிஞர் அண்ணா லஞ்சம் வாங்காதவர்-கறை படியா கரத்துக்கு சொந்தக்காரர். புரட்சித்தலைவர் கறை படியாத கரத்துக்கு சொந்தக்காரர் மட்டுமல்ல - கொடுத்துக் கொடுத்த சிவந்தகரமுடையவர் அப்படிப்பட்ட புரட்சித் தலைவரின் ஆட்சியை சட்டம் ஒழுங்கு இல்லாத ஆட்சி. ஜனநாயகவிரோத ஆட்சி என்கிறார்கள்.

எதிர்க்கட்சித் தலைவர் கருணாநிதியாலும் மற்றவர்களாலும் தூண்டிவிடப்பட்ட போராட்டங்களினால் கடந்த ஒன்றரை ஆண்டு காலத்தில் ஒன்றேகால் கோடிரூபாய் மதிப்புள்ள பஸ்கள் எரிக்கப்பட்டும் உடைக்கப்பட்டும் உள்ளன, மக்களின் வரிப்பணம் தான் பாழடிக்கப்பட்டுள்ளது என்பதை நினைவில்கொள்ளவேண்டும்

சட்ட மன்றத்திலே 'போராட்டங்களை தூண்டுகிறீர்களே' என்று கேட்டால், 'ஆமாம் தூண்டுவோம்-சமாளிக்க வேண்டியது உங்கள் கடமை. நாங்கள் அரசியல்தான் நடத்த வந்திருக்கிறோம் ஆசிரமம் நடத்தவரவில்லை" என்கிறார்கள். அது சட்டமன்றபதிவேட்டிலேபதிவாகி இருக்கிறது. பேரறிஞர் அண்ணாவும் எதிர்க் கட்சி வரிசையில் இருந்தார் இப்படியா அரசியல் நடத்தினார்?

## தலை முடி போனதுதான் மிச்சம்

என்ஜினியர்கள் போராட்டத்தின்போது மொட்டை அடித்து கொண்டு வந்தார்கள் புரட்சிதலைவர்பார்த்து பேசியபின் அவர்களின்பிரச்சினை தீர்ந்தது கருணாநிதியை நம்பியதால் தலைமயிர் போனது தான் மிச்சம்.

(கைதட்டல்-சிரிப்பு)

தமிழகத்தில் எந்த ஒரு சாவு விழுந்தாலும் அது கழகத்துக்காரர்களால் தான் ஏற்பட்டது என்று கூறி வருகிறார்கள் எலி செத்துவிட்டால்கூட அது அனைதிந்திய அண்ணா தி. மு. கவினரால் செத்து விட்டது என்ற நிலைக்கு தி. மு. க. வினர் வந்து விட்டனர்.

புராணங்களை நம்பவில்லையென்றாலும் உதாரணத்துக்காக அண்ணா அதிலிருந்து சிலவற்றை சுட்டிக்காட்டுவார், அது போல நமக்கு ஜாதகத்தில் நம்பிக்கை இல்லை தான் ஆனாலும் ஜாதகம் பார்ப்பவர்கள் சில கட்டங்களை போட்டு கிரகங்கள் இந்த இந்த வீடுகளில் இருக்கும் என்று சொல்லுவார்கள். அது அவர்களுக்கு மட்டும் தான்புரியும். 12 கட்டங்களை போட்டுவிட்டு 9 கிரகங்களில் 7 கிரகங்களுக்கு தான் வீடு இருக்கும் மற்ற இரண்டு கிரகங்களுக்கு வீடில்லை என்பார்கள்,

மற்ற இரண்டு கிரகங்களான ராகுவும் கேதுவும் யாரிடமாவது சேர்ந்து தான் இருக்கும் என்பார்கள். அதுபோல அரசியலில் வலது - இடது கம்யூனிட்டுகள் தனியாக நின்று செயல்பட முடியாது. கழகத்துடனோ அல்லது தி.மு.க. வுடனோ சேர்ந்து தான் அது செயல்படும். இப்போது தி.மு.க. வுடன் இருக்கிறது, நாடு ஆறுமாதம், காடு ஆறுமாதம்.

சென்னையை அடுத்து மிகப் பெரிய நகரமும் அதிக மக்கள் தொகையான ஏழரை லட்சம் பேர் வாழும் மதுரை மாநகராட்சி தேர்தல் புரட்சித் தலைவரின் மாநில கால ஆட்சிக்கு பின்னர்தான் வந்தது. அப்பொழுது கிரகங்கள் இரண்டும் நம்முடன் இருந்தது. சில இடங்களைத் தந்தோம் வெற்றியும் பெற்றது.

தி.முக. 5 இடங்களில் தான் வென்றது. புரட்சித் தலைவர் வெளிநாடு செல்லுவதற்கு முன்பு ராஜாஜி மண்டபத்தில் சட்டமன்ற உறுப்பினர்களிடமும் மற்றவர்களிடமும் பேசினர்.

மதுரைமுத்து வேகமாக வந்தார். உடனே புரட்சித் தலைவர் 'முத்து வேகமாகவருகிறாரே ஏதாவது நல்ல செய்தி கொண்டுவருகிறாரா' என்றார் மதுரை முத்துவுடன் 2பேர் வந்தனர் அவர்கள்புரட்சித் தலைவருக்கு மாலை அணிவித்துவிட்டு கழகத்தில் இணைகிறோம்என்றனர், அவர்களில் ஒருவர் மதுரை மாநகராட்சி மன்ற திமுக உறுப்பினர்களுக்கு தலைவராக நியமிக்கப்பட்டவர்- முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் மற்றவர் மாநகராட்சி மன்ற தி.மு.க. உறுப்பினர் அவர்களைகேட்டால் 'தலைமை சரியாக எங்களை இயங்கவிடவில்லை' என்றனர்.

சட்டமன்ற தேர்தல். மதுரை மாநகராட்சி மன்ற தேர்தல்களில்கழகம்

(4-ம் பக்கம் பார்க்க)

## புதுவை விவகாரம்: ஏ. முருகேசன் கேள்விக்கு அமைச்சர்பதில்

புதுடெல்லி, பிப். 25--பாண்டிச்சேரியை அண்டை மாநிலத்துடன் இணைப்பதற்காக எந்தநடவடிக்கையையும் அரசு மேற்கொள்ளவில்லை என்று நாடாளுமன்றத்தில் கழக உறுப்பினர் ஏ.முருகேசன் கேள்விக்கு பதிலளிக்கையில் உள்துறை அமைச்சர் எச் எம் பட்டேல் கூறினர்,

மக்களின் உணர்வுகளையும் சம்பந்தப்பட்டவர் பிரச்சினைகளையும் ஆலோசித்த பிறகே முடிவு எடுக்கப்படும் என்றும் பட்டேல் தெரிவித்தார்.

## ஆளுநரிடம் பசுவதை தடுப்பு சங்கம் அளித்தமகஜர்

சென்னை, பிப், 25-நீதிபதிஎஸ். மோகன் தலைமையில் என். சி, ராகவாச்சாரி சிந்துநந்த கோபால், வி.டி.டைட்டஸ்ஆகியோர் பசுவதைதடுப்புசங்கம் சார்பில் ஆளுநரைசந்தித்து மகஜர் ஒன்றை அளித்தனர்.

வட்ட மாவட்ட மட்டத்தில் பசுவதை தடுப்பு நடவடிக்கைகளை துரிதப் படுத்துமாறு அவர்கள் ஆளுநரிடம் கோரியுள்ளனர்.

## அக்டோபர் முதல் இதுவரை

# 60 ஆயிரம் பேருக்கு மனை - நிலப்பட்டா: எஸ். டி. எஸ். தகவல்

சென்னை, பிப், 25—தமிழ்நாட்டில் கடந்த அக்டோபர் மாதம் முதல் இந்த தேதி வரை 30 ஆயிரத்து 839 மனைப் பட்டாக்களும்; 29 ஆயிரத்து 707 நிலப் பட்டாக்களும்கொடுக்கப் பட்டிருக்கின்றன. பட்டாக் கொடுக்கப்பட்டவர்களுக்கு நிலம் கிடைக்கவில்லை என்ற புகார் எதுவும் வரவில்லை என்று வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி. எஸ், இன்று சட்டப் பேரவையில் தெரிவித்தார்.

புறம்போக்கு நிலங்களில் ஆக்கிரமிப்பு செய்துள்ளவர்களை அப்புறப்படுத்துவது சம்பந்தமாக சட்டசபையில் சரமாரியாக கேள்விகள் கேட்கப்பட்டன.

கேள்விகளுக்கு வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி. எஸ் பதில் அளித்துக் கூறியதாவது:

புறம்போக்கு நிலங்களை ஆக்கிரமிப்பு செய்பவர்களை அப்புறப்படுத்த தமிழ்நாடு 1905-வது ஆண்டுநில ஆக்கிரமிப்பு சட்டம், 1960-ம் ஆண்டு அனுமதி இல்லாத அனுபோகதாரர்களைவெளியேற்றும்சட்டம் ஆகியவைகளின் கீழ்நடவடிக்கைமேற்கொள்ளப் படுகிறது.

ஆக்கிரமிப்பு செய்த நிலம் அரசுக்கு அல்லது மக்களுக்கு சமுதாயத்துக்கு தேவைப்படுமானல் இந்த நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறது.

ஏரியின் உள்வாயிலில் ஆக்கிரமிப்பு செய்துள்ளவர்களையும் வெளியேற்றப் படுகிறது.

ஏரிக்குள்5 ஏக்கர் நிலத்தை ஆக்கிரமிப்பு செய்துள்ளவர்கள் ஏழையானாலும், பணக்காரரானாலும்அந்தஏரியின் தண்ணீர் 100 ஏக்கர் 200 ஏக்கர் ஆயக்கட்டு பாதிக்கப்படும் பட்சத்தில் வெளியேற்றப் படுகிறார்கள்.

1978 அக்டோபர் முதல் இதுவரை 30 ஆயிரத்து 839 மனைப் பட்டாக்களை இந்த அரசு கொடுத்திருக்கிறது.

அதே போன்று 29 ஆயிரத்து 707 நிலப்பட்டாக்களையும் இந்த அரசு கொடுத்திருக்கிறது.

பட்டாக்கள் நிலத்துடனேயே கொடுக்கப்படுகிறது. நிலம் கிடைக்கவில்லை என்று இதுவரை புகார் எதுவும் இல்லை. சாலைபுறம்போக்கு நிலங்களை ஆக்கிரப்பு செய்துள்ளவர்களை அப்புறப்படுத்தும் பணியினை ஊராட்சி அமைப்புகள் மேற்கொண்டுள்ளன.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். தெரிவித்தார்.

# தமிழ்நாட்டில் 100 தீப்பெட்டி தொழிற்சாலைகளை அமைக்கதிட்டம்

சென்னை, பிப். 25-தமிழ்நாட்டில் மேலும் ஒரு பணிக் கூட்டுறவுச் சங்கத்தைத் துவக்கி அதன் மூலம் 100 தீப்பெட்டித் தொழிற்சாலைகளை ஏற்படுத்த தமிழகஅரசு திட்டமிட்டு வருகிறது என்று கிராமத் தொழில் துறை அமைச்சர் ராஜாமுகமது தெரிவித்தார்.

தற்போது, தீப்பெட்டி ஆலைகளுக்கு தேவையான மூலப்பொருள் தட்டுப்பாடு எதுவும் இல்லை.

தீப்பெட்டித் தொழிற்சாலைகள், தொழில்துறையின் மூலம் 3 வகைகளில் செயல்படுகின்றன. தொழில் வணிகத்துறையின் ஆளுகைக்கு உட்பட்டு கூட்டுறவுத் துறையின் கீழ் இயங்கும் தீப்பெட்டித் தொழிற்சாலைகள், கதர் கிராமக் கைத் தொழில் துறையில் பதிவு செய்யப்பட்ட 175 தீப்பெட்டித் தொழிற்சாலைகள் தீப்பெட்டி கூட்டுறவு பணிச் செயல் சங்கம் என்ற மூன்று வகைகளில் செயல்படுகின்றன.

ஆண்டு ஒன்றுக்கு ஏழரைக் கோடி தீக்குச்சிகளை உற்பத்தி செய்யும் இரு தீப்பெட்டித் தொழிற்சாலைகளுக்கு மத்திய அரசுகலால் வரியில் சில சலுகைகளை அளிக்கிறது.

இதன் மூலம் அவர்களுக்கு பல நன்மைகள் கிடைக்கின்றன.

தமிழ்நாட்டில் மேலும் ஒரு கூட்டுறவு தீப்பெட்டி பணி செயல் சங்கத்தை துவக்க அரசு பரிசீலித்து வருகிறது. இதன் மூலம் மேலும், 100 தீப்பெட்டித் தொழிற்சாலைகளை திறக்க முடியும்.

இந்தத் தொழிற்சாலைகளுக்குத் தேவையான மூலப்பொருள்களை அரசே கொடுக்கும். தீப்பெட்டித் தொழிற்சாலைகளுக்கு உரிமங்கள் அளிக்கப்படுவதற்கு சில நிபந்தனைகள் கடுமையாக இருக்கின்றன. அதற்கு காரணம் இதன் மூலப் பொருள் எந்த நேரத்திலும் தீப்பற்றிக்கொள்ளும் அபாய நிலையில் உள்ளது.

எனவேதான் நிபந்தனைகள் சில கடுமையாக இருக்கின்றன.

அவைகளை எளிமையான வகையில் மாற்றி உரிமங்கள் வழங்குவது பற்றி அரசுதீவிரமாகபரிசீலித்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது தெரிவித்தார்.

## உ. பி. முதல்வர் பதவிக்குகுப்தா போட்டி

லட்சுமணபுரி, பிப். 25-உத்தரபிரதேச முதல்வர் பதவிக்கு முன்னாள் முதல்வர் சி. பி. குப்தாவும் சபாநாயகர் பனார்சிதாசும் போட்டி யிடுகின்றனர். கடும்போட்டி ஏற்பட்டுள்ளது.

உத்தரப்பிரதேச முதல்வர் ராம்நரேஷ் யாதவ் மீது நம்பிக்கை இல்லை என்று ஜனதா கட்சி எம். எல். ஏக்கள் தீர்மானம் நிறைவேற்றியதைத் தொடர்ந்து அவர்பதவியை ராஜினமா செய்து விட்டார்.

புதிய முதல்வரைத் தேர்ந்தெடுக்க இம்மாதம் 27ந் தேதி ஜனதா கட்சி எம் எல் ஏக்கள் கூடுகிறார்கள். புதிய முதல்வரை தேர்ந்தெடுப்பதில் சரண்சிங் கோஷ்டிக்கும் (ராம் நரேஷ்யாதவ் ஆதரவாளர்கள்), எதிர்ப்பாளர்களுக்கும்இடையேகடும்போட்டி ஏற்பட்டுள்ளது.

தங்கள் கோஷ்டியைச் சேர்ந்த ஒருவரை முதலமைச்சராக கொண்டுவந்து விட வேண்டுமென்று இரு கோஷ்டியினரும் வரிந்து கட்டிக் கொண்டு வேலை பார்க்கின்றனர்.

சரண்சிங் கோஷ்டியினர் பனார்சிதாசை நிறுத்த முடிவு செய்துள்ளனர். பனார்சிதாஸ் இப்போது உத்தரப்பிரதேச சபாநாயகராக இருந்துவருகிறார்.

முதல்வர் பதவிக்குபோட்டியிடுவதற்காக நாளை (திங்கள் சபாநாயகர் பதவியை ராஜினமா செய்யப் போவதாக அவர் நேற்று அறிவித்தார்.

## மாற்றுக்கட்சி தூண்டுதலுக்கு செவிசாய்க்காதீர்!

# பால்வள நிறுவன ஊழியர்களுக்கு வேண்டுகோள்

சென்னை, பிப், 25—பால்வள நிறுவன ஊழியர் குறைகளை அரசு தீர்க்கவில்லை என்று கூறி கூட்டாக விடுமுறை எடுக்கப்போவதாக சிலர் அறிவித்துள்ள முடிவில் அண்ணா தொழிலாளர் சங்கம் வன்மையாக கண்டித்துள்ளது.

கூட்டாக விடுமுறை எடுக்கும் முடிவை புறக்கணித்து கடமை உணர்வுடன் பணியாற்றுமாறு பால் வளநிறுவன அண்ணா தொழிலாளர் சங்க பொது செயலாளர் த. புருஷோத்தம்மன் ஒரு அறிக்கையில் கேட்டுக்கொண்டுள்ளார்.

அவரது அறிக்கைவருமாறு பால்வள நிறுவனஊழியரின்பல்வேறுகோரிக்கைகள் அரசிடமும் நிர்வாகத்திடமும் வாதாடி கழக தொழிற்சங்கப் பிரவு செயலாளர் வை. பெருமாளும் அண்ணா தொழிற் சங்கநிர்வாகிகளும் பெற்றுத் தந்துள்ளனர்.

கேசுவல் விடுமுறை 12 நாளாக உயர்த்தப்பட்டது பி.டி.எஸ்.ஏ. தொழிலாளருக்கு ரூ20 சம்பளஉயர்வு, இரண்டு வருட போனஸ் பெற்றது

தினக்கூலி தொழிலாளருக்கு இ எஸ் ஐ வசதி மற்றும் பல்வேறு துறையினருக்கு பதவி உயர்வு வேலை நிரந்தரம்முன்பண உயர்வு இவற்றை அண்ணா தொழிற் சங்கம் வாங்கிக்கொடுத்துள்ளது.

இதரகோரிக்கைகளையும் படிப்படியாக நிறைவேற்ற உறுதி கூறப்பட்டுள்ளது. இந்நிலையில் மாற்றுக் கட்சி சங்கங்களின் தூண்டுதலுக்கு பலியாகாமல் கடமை உணர்வுடன் அனைத்து ஊழியர்களும் பணியாற்ற முன் வரவேண்டும் என்று தமிழ் நாடு பால்வள நிறுவன அண்ணா தொழிலாளர் சங்க பொதுச்செயலாளர் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

## விவசாயிகள் கூலி உயர்வு: காங்கிரஸ் எம். பி. பாராட்டு

சென்னை, பிப். 25-தமிழக அரசு, தஞ்சை மாவட்ட விவசாய தொழிலாளர்களுக்கான கூலி நிர்ணயத்தை ரூ 1.20 அதிகப் படுத்தி உத்திர விட்டதை தமிழ்நாடு இந்திய தேசிய கிராமத் தொழிலாளர் காங்கிரசின் தலைவர் கே. இராமமூர்த்தி எம் பி வரவேற்றுள்ளார்.

## சினிமா செய்திகள்

3-ம் பக்கம்

## பொய்ச்செய்தி நாச்சிமுத்து கண்டனம்

சென்னை, பிப். 25 தங்களைப் பற்றி மக்கள் செய்தியில் வெளியான தவறான செய்திக்கு கழக சட்டமன்ற உறுப்பினர் நாச்சிமுத்து மறுப்பு தெரிவித்துள்ளார்.

மேட்டூர் தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் கே. பி. நாச்சிமுத்து ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:

சேலம் மாவட்ட இந்திய கம்யூனிஸ்ட் கட்சி செயலாளராக இருக்கும் ஆர்த்தநாரி (வாத்தியார்) என்பவர் என்மீதும், நங்கவல்லி வட்டார ஒன்றிய அமைப்பாளர் சுப்பிரமணியம் மீதும் பெரிய சோரகையைச் சேர்ந்த தோழர் மீதும் தொடர்ந்துள்ள பொய்யான செய்தியை மக்கள் செய்தி வெளியிட்டுள்ளது.

அர்த்த நாரியை கொலை செய்ய முயற்சிக்கிறார்கள் என்ற பொய்யான குற்றச்சாட்டுக்களை தெரிவித்துள்ளனர்.

பெரிய சோரகை கழகத் தோழர் ராமசாமியை தாக்கி காயப்படுத்தியுள்ளனர் அவர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சைப்பெற்று வருகிறார் உண்மை இது தான். பெரிய சேரகை நங்கவல்லி வலவாசி ஆகிய பகுதிவிவசாயிகள் யாரால் பாதிக்கப் படுகின்றனர் என்றும்மக்களுக்குத்தெரியும்.

வேண்டுமென்றே திட்டமிட்டு பொய்ச் செய்திகளை வெளியிடுபவர்கள்மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இவவாறு சட்டமன்ற கழக உறுப்பினர் கே. பி. நாச்சிமுத்து அறிக்கையில் கூறியுள்ளார்.

தனியார் பஸ்களுக்கு வரி உயர்வு

## மசோதா தாக்கல்

சென்னை, பிப். 25- மாநிலத்தின் வருவாயைப் பெருக்குவதற்காக விரைவுப் பேருந்துகள், சென்னை பெரு நகரப் பகுதிகளில் ஓடுகின்ற பேருந்து வண்டிகள் தவிர 250 அல்லது அதற்கு அதிகமான எண்ணிக்கையில் பயணிபேருந்துகளைகொண்டுள்ள பேருந்து உரிமையாளர்களுக்கு விதிக்கப்படும் மோட்டார் வண்டி வரிக்கு 66சதவீதத்திற்கு அதிகமாக மல்கூடுதல்மேல்வரி விதிக்க வகை செய்யும் மசோதா ஒன்றை அமைச்சர் பொன்னையன் இன்று சட்டப் பேரவையில் தாக்கல் செய்தார்.

## சென்னை அட்வர்டைசிங் கிளப் தலைவர்

சென்னை, பிப். 25 மார்க்கெட்டிங் அட்வர்டைசிங் அசோசியேட்ஸ் நிறுவனத்தின் இயக்குனரான ஆர் நரசிம்மன் நடப்பு ஆண்டிற்கு சென்னை அட்வர்டைசிங் கிளப் தலைவராகத் தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளார்.

தாமஸ் மலைக்கல் துணைத் தலைவராகவும், கே ராமபத்ரன் செயலாளராகவும், திருமதி பிலால் துணைச் செயலாளராகவும், டி. கே. ராஜகோபால் பொருளாளராகவும், கே. கே நாணு. டி. எஸ். நாகவாசன், ஆர். ஆனந்த், எஸ். ராமச்சந்திரன், கே, வாசுதேவன், வி. எஸ். சந்திரசேகர் ஆகியோர் கமிட்டி உறுப்பினர்களாகவும் தேர்ந் தெடுக்கப்பட்டனர்.

# அந்தமான் தீவுக்கு நேதாஜியின் பெயர்: ஆர்.எம்.வீ. கோரிக்கை

சென்னை, பிப். 25 அந்தமான் தீவுக்கு நேதாஜியின் பெயர் வைக்க மத்திய அரசு ஆவன செய்ய வேண்டும் என்று அமைச்சர் ஆர் எம் வீ கூறினார்.

பி. முத்துராமானுஜத் தேவர் எழுதிய "நேதாஜியும் நவீன இந்தியாவும்" என்ற நூல் வெளியீட்டு விழா சென்னையில்ராஜாஜி மண்டபத்தில் நடந்தது. அகில இந்திய பார்வர்டு பிளாக்கட்சித்தலைவர் மூக்கையாத்தேவர்எம்.எல்.ஏ. விழாவிற்குத்தலைமை தாங்கினார். நூலை வெளியிட்டார் அமைச்சர் ஆர்.எம்.வீ. அதைப் பெற்றுக் கொண்டார். அப்துல் லத்தீப் எம் எல் ஏ, சந்திரன் எம் எல் ஏ கே எஸ் ஏகாம்பரம், கவிஞர் முத்துராமலிங்கம் செந்தில்நாதன், ஆண்டிப்பட்டி தொகுதி சட்டமன்றஉறுப்பினர் கந்தசாமி, ஏ. ஆர். பெருமாள், மூக்கையாத் தேவர் ஆகியோரும் பேசினர்.

நூலாசிரியர் ப. முத்துராமானுஜத் தேவருக்கு ஏ ஆர் பெருமாள் பொன்னாடை போர்த்தினார்.

அமைச்சர் ஆர்.எம்,வீ. பேசியதாவது:

இந்தியாவில் சுதந்திரத்திற்காக பாடுபட்ட விடுதலை வீரர் வங்கத்து தங்கம் நேதாஜி அவர்களைப் பற்றி எழுதிய 'சுப்ரீம் கமாண்டர் நேதாஜி ஆண்ட் மாடர்ன் இந்தியா' என்ற நூல் வெளியீட்டுவிழாவில் பல்வேறு கட்சிகளையும் பங்குபெற வைத்து பெரிய விழாவாக கொண்டாடிக் கொண்டிருக்கிறீர்கள்.

இதன் மூலம இந்தியத் துணைக்கண்டத்திலும், தமிழகத்திலும் விடுதலை வீரர் நேதாஜியை நினைவு படுத்தும் முயற்சி நடை பெற்றுக் கொண்டிருக்கிறது.

நினைவு படுத்தும் முயற்சி நடந்து கொண்டிருக்கின்றது என்று ஏன் கூறினேன் என்பதற்கானகாரணத்தை நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள். இன்றைக்கு இந்தியத் துணைக்கண்டமானாலும்சரி, தமிழகம் ஆனாலும்சரி நாட்டுக்காக வாழ்ந்த தலைவர்களை - விடுதலை வீரர்களை மறந்துவிடும் அலட்சியப் போக்கு உள்ளது.

நம்மைப் பெற்றவர்களை வழிகாட்டிகளை மறந்து விடும் தன்மைக்கு நமது இளையதலைமுறை ஆளாக்கப்பட்டிருக்கிறது. இது போன்ற நிகழ்ச்சிகள் மூலம் நினைவுபடுத்துவது தலையாய கடமையாகிறது.

இந்திய விடுதலைக்கு வித்திட்டவர் காந்தியடிகள். நாம் மறக்கவில்லை, ஆனால் அந்த நிலையோடு அந்த விடுதலைக்கு கூரேற்றிய வீரரை எந்த ஆயுதத்தைப் பயன்படுத்தினால் எதிரி வீழ்வான் என்று கருதி அதற்கு வடிவம் அமைத்தவரை மதிக்க வேண்டிய அளவுக்கு நினைவு கொள்கிறோமா என்றால் இல்லை. இதையறிந்து நாம் அனைவரும் வெட்கத்தால் தலை குனியவேண்டிய நிலையில் இருக்கிறோம்.

அரசியல் சட்டப்படி இந்திய நாட்டின் முதல் பிரதமர் பண்டித நேரு அவர்கள். இதை யாராலும் மறுக்க முடியாது. ஆனால் அதே நேரத்தில் எழுதப்படாத அரசியல் சட்டம் என்று சொல்வார்களே அந்த இந்திய வரலாற்றின் முதல் பிரதமர் விடுதலை வீரர் நேதாஜி ஆவார்கள்.

### சரித்திரத்தை மறைப்பதா?

என்ன இவர் அரசியலை மாற்றிப் பேசுகிறார் என்று யாரும் தவறாக எண்ண மாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

எழுதப் பட்ட அரசியல் சட்டப்படி முதல் பிரதமர் பண்டித நேரு என்றால்எழுதப் படாதசரித்திரத்தின்படி முதல் பிரதமர் நேதாஜி ஆவார்.

1947-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15-ம் தேதிக்கு பின்போ அல்லது சிறிது காலத்திற்கு முன்போ நேரு பாரதப் பிரதமராக பதவி ஏற்றார்.

ஆனால் 1943-ம் ஆண்டு டிசம்பர் திங்கள் 30-ம் நாள் இந்திய பூபாகத்தில் அந்தமான் தீவில் இந்திய தேசிய ராணுவம் இந்தியாவின் மூவர்ணக் கொடியை ஏற்றிவைத்து இந்தியாவின் விடுதலைப் பெற்ற ஒருபகுதி என்று அறிவிக்கப்பட்டிருந்தது. அதுவரையில் எழுதப்பட்டது? இந்திய வரலாற்றில் முதல் இடத்தில் இருக்க வேண்டிய அந்தப் பகுதிகள் அந்த சரித்திரம் இன்றைக்கு மறைக்கப்பட்டிருக்கின்றன.

### தீவுக்கு நேதாஜி பெயர்

அதிர்ஷ்டவசமாககடந்த ஆண்டு நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் ஒரு கருத்தினை வெளியிட்டேன். மேற்குவங்க அமைச்சரும் அந்த கூட்டத்திலே கலந்துகொண்டு பேசியிருக்கிறார். என்னுடைய ஆவலை விடுதலைக்காக போராடிய சமுதாயத்தின் சார்பிலே ஒருகருத்து வெளியிட்டேன் அன்றைய தினம் பத்திரிகைகளில் அதுசரியாக விளம்பரப்படுத்தப்படவில்லை.

இந்திய மண்ணின் விடுதலைக்காக பாடுபட்டு அந்தமான் தீவில் 'இந்தியாவின் ஒருபகுதி விடுதலை பெற்றது' என்று அறிவித்த நிகழ்ச்சியின் அறிகுறியாக விடுதலை வீரர்கள் அடைத்து வைக்கப்பட்ட அவமானச் சின்னமாக விளங்கிய அந்தத் தீவிற்கு நமமுடைய மாவீரர் சுபாஷ்சந்திர போசின் பெயரை வைக்க வேண்டும் என்று கருத்து வெளியிட்டேன். துரதிருஷ்டவசமாக மேல் நடவடிக்கை தடைபட்டது.

### வங்கத்தில் தீர்மானம்

மூக்கையாத் தேவரிடம் இங்கே பேசுகின்ற நேரத்திலும் மேற்கு வங்க சட்ட மன்றத்திலே தீர்மானம் கொண்டு வருவதற்கு தலைவர்என்றமுறையில் நீங்கள் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன்.

நாடாளுமன்றத்தில் நடக்கும் நிதி நிலை அறிக்கை விவாதத்திலே கழக உறுப்பினர்கள் இது குறித்து நிச்சயம் கோரிக்கை எழுப்புவார்கள் என்று இந்த அவையில் சொல்லிக் கொள்கிறேன், ஏன் அவர் பெயர் வைக்கக் கூடாதா?

வங்கத்தையும் தமிழகத்தையும் இயற்கையே இணைத்து விட்டுள்ளது. மேற்குவங்கத்திலிருந்து ஒருவர் தமிழகத்துக்கு வருகிறார் என்றால் சொந்த மாநிலத்துக்கு வருவதாக கருதுகிறார் அந்த அளவுக்கு இயற்கை இரண்டு மாநிலங்களையும் ஒன்றாகஇணைத்துள்ளது.

அயல்நாடுகளிலே அமைந்த இந்திய தேசிய ராணுவமாகட்டும் சிங்கப்பூரிலே அமைந்த இந்திய தேசிய ராணுவமாகட்டும், இதற்கு பேருதவி புரிந்தவர்கள் யார், தமிழரல்லவா? இந்திய தேசிய ராணுவத்தில் பெரும் பகுதியினர் தமிழகத்தைச் சேர்ந்தவர்கள் என்ற பெருமை உண்டு.

நேதாஜியே சொன்னாரே ஆற்றல்மிக்க என் பணிக்கு ரத்தத்தை கேட்கிறேன், வேண்டிய இரத்தத்தைத் தர முன்வந்தவர்கள் தமிழ் சமுதாய மக்கள்தான் என்று அந்த மாவீரன் சொல்லவில்லையா?

நான் மீண்டும் பிறப்பதாக இருந்தால் தமிழ் நாட்டில் பிறப்பதைப் பெருமையாகக் கருதுகிறேன் என்று நேதாஜி சொன்னாரா? இல்லையா?

வீரம் செறிந்த நாடு தமிழ்நாடு. வங்கத்தில் தோன்றியவர்களும் ஆற்றல் மிக்கவர்கள். தமிழகமும் வங்கமும் இணைந்து நிற்கும் காட்சியை நாம் இன்றைக்கு உணர முடிகிறது

### நேதாஜி வாரிசு

நேதாஜியின் வாரிசு எங்கே தோன்றினார்?

தென்னாட்டில் தமிழகத்தில் உள்ள தென்பாண்டி மண்டலத்தில்நேதாஜியின் வாரிசாக பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் தோன்றினார்.

நேதாஜியின் வரலாற்றோடு பின்னிப்பிணைந்தவர் முத்துராமலிங்கத் தேவர் இன்றைய தினம் தேசிய இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் நேதாஜி பெயரைச் சொன்னால், பசும் பொன் முத்து ராமலிங்கத் தேவரின்பெயர் சொல்லவேண்டி நேரிடுமே என்பதற்காக மறைத்தார்களா, அல்லது மறைக்கப்பட்டாரா என்று தெரியவில்லை.

அண்ணல் காந்தியடிகள் விடுதலைக்கு வழி வகுத்துக் கொடுத்தார் - மறுக்கவில்லை. ஆனால் அது உருவாவதற்கு உலைக் களமாக விளங்கினாரே நேதாஜி. அவரது சரித்திரம் ஏன் மறைக்கப் பட்டது என்பதுதான் கேள்வி?

நேதாஜி பள்ளியில் படித்தகாலம் தொட்டே வீரனாக விளங்கிவளர்ந்து விடுதலை வீரராக விளங்கி இருக்கிறார்

என்னால் அவர் மறைந்து விட்டார் என்று சொல்லமுடியாது 82வயது நிரம்பிய ஆற்றல் மிக்கவர் இன்னும் இருக்கிறேன் என்று கேள்விக் குறியை வைத்துவிட்டு விளங்கிக் கொண்டிருக்கிறார் என்று தான் நான் கூறுவேன்

நேதாஜி சொன்ன 'ஜன கண மன' தேசிய கீதத்தை எடுத்துக் கொண்டார்கள் அவர் உயர்த்திய மூவர்ண தேசிய கொடியை எடுத்துக் கொண்டார்கள் அவர் சொன்ன ஜெய்ஹிந்த் என்ற வார்த்தையை எடுத்துக் கொண்டார்கள் ஆனால் அவரை சொல்ல மாட்டேன் என்கிறார்கள், இது என்ன நியாயம்?

தேசியவாதிகள் என்று உரிமை பேசுபவர்கள் இதை எண்ண வேண்டாமா?

நான் கேட்பதால், இங்கேயிருக்கும் ஏகாம்பரம் போன்றோர் மன்னிக்க வேண்டும். நீங்கள் நேதாஜியை நினைவு படுத்தும் வகையில் என்ன காரியம் செய்தீர்கள்?

இந்தியா என்றால் அண்ணல் காந்தியடிகள் பெயர் வரும்போது நேதாஜி பெயரும் வரவேண்டாமா?

நேதாஜியின் பெயரைச் சொன்னால் முத்துராமலிங்கத் தேவர் பெயர் சொல்ல வேண்டுமே என்ற பயமா?

நேதாஜி என்று சொன்னால் முத்துராமலிங்கத் தேவர் பெயர் தானாக வந்துவிடும். அப்படியிருக்கும்போது எப்படி இரண்டு பெயர்களை பிரிக்க முடியும்

முத்துராமலிங்கத் தேவர் ஒரு சமூகத்துக்கோ ஒரு பிரிவுக்கோ சொந்தக்காரர் அல்ல - இந்திய தேசியத் தலைவர்களில் முன்னணித் தலைவராக விளங்கியவர் அல்லவா?

கடந்த ஜனவரிமாதம் பசும்பொன் முத்துராமலிங்கத்தேவரின் பிறந்த நாளை - நினைவு நாளை - ஆமாம் இரண்டுநாளும் ஒரே நாளில் தான் வரும் பசும்பொன் கிராமத்தில் கொண்டாட வேண்டும் என்று நான் ஆசை பட்டேன் சூழ்நிலைகள் காரணமாகமதுரையிலேயும் சென்னையிலேயும் நடந்து சிறப்பாக முடிந்தன.

### அரசு விழா நடத்தும்

நேதாஜியின் பிறந்த நாளை அடுத்த ஆண்டுஅரசு கொண்டாடும்என்றுதெரிவித்துக் கொள்கிறேன்.

நாடாளுமன்றத்தில் சட்டமன்றத்தில் தேவர் ஆற்றிய வீர உரை அழகு தமிழ் பல்லாயிரக்கணக்கான மக்களை ஈர்த்திருக்கிறது.

முதல்வர் புரட்சித் தலைவர் பற்றி பலபேர் அவர் நடிகர்கள் என்று மட்டும்தான் தெரிந்து வைத்திருக்கிறார்கள் அவர் சிறந்த சோஷலிசவாதி என்று பலருக்கு தெரியாது?

1939ல் நடைபெற்ற திரிபுரா காங்கிரசில் அகில இந்தியகாங்கிரஸ்சார்பாக நேதாஜி போட்டியிடுகிறார் காந்தியடிகள் அவரைப் போட்டியிடாதீர்கள்என்று தடுக்கிறார் அகில உலக செல்வாக்கு பெற்ற தேசப் பிதா காந்தியடிகள் அவரை எதிர்த்து பட்டாபி சீதாராமையாவை நிறுத்துகிறார் முடிவில் நேதாஜி வெல்கிறார். அந்த நேரத்தில் சுபாஷ் சந்திர போசுக்கு ஆதரவாக இருந்த - சோசலிசவாதியாகஇருந்தவர் புரட்சித் தலைவர்தான். இன்றைய அரசியல் வாதிகள் பலருக்கு இது தெரிந்திருக்காது. அதனால் தான் அவர்கள் தப்புக்கணக்கு போட்டு ஏமாறுகிறார்கள்.

இங்கே பேசிய கந்தசாமி எம். எல். ஏ. ஒரு வேண்டுகோளை விடுத்தார், நீங்கள் சொல்லி - கோரிக்கையை அறிந்து ஆகட்டும் செய்யலாம் என்ற நிலையில் இருப்பதல்ல இந்த அரசு.

தேசத்திற்காக பாடுபட்ட எந்த தலைவருக்கும் யாருக்கும் எத்தகைய புகழைச் சேர்க்க வேண்டுமோ எந்த சமயத்தில் செய்ய வேண்டுமோ அதைச் செய்வதில் இந்த அரசு தயங்காது.

பசும்பொன் முத்து ராமலிங்கத்தேவர் எங்கோ மறைகிறார். எங்கோ இருக்கும் பேரறிஞர் அண்ணாவுக்கும் புரட்சிதலைவருக்கும் தகவல் கிடைக்கிறது மூக்கையாத் தேவரும் கந்தசாமியும் அங்கேயிருக்கிறார்கள்.

காலம் கடமைப்பட்டவர்கள் வரிசையில் பேரறிஞர் அண்ணா புரட்சித் தலைவர் இருவரைத்தான் அங்கே சேர்த்து வைக்கிறது.

தந்தை (முத்து ராமலிங்கத் தேவர்) இறந்த செய்தி அறிந்து தவித்து தலைமகன் (புரட்சித் தலைவர்) ஓடி வந்து அங்கே நிற்கிறார். இது காலம் தீாப்பளித்த கட்டளை என்பதை மறந்து விடக் கூடாது.

அந்த உணர்வுடன்தான் முதல்வர் புரட்சித் தலைவர் செயல்பட்டு வருகிறார்.

தமிழகத்தில் பல்வேறு நூல் நிலையங்களில் இந்த நூல் இடம்பெற அரசு முயற்சி எடுக்கும், தமிழிலும் நேதாஜி பற்றி நூல் வெளிவர வேண்டும். இதற்கு அரசு உதவி அளிக்கும்.

இவவாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசினார்.

### மூக்கையாத் தேவர்

அகில இந்திய பார்வர்டு பிளாக் கட்சித் தலைவர் மூக்கையாத்தேவர் பேசுகையில் கூறியதாவது:

இன்று ஒரு முக்கிய நாள் ஆகும். அமைச்சர் ஆர் எம் வீயின் போர் உரை போன்ற வீரஉரை அறிந்து செத்துக்கிடந்த என் இதயம் துளிர் விடுகிறது.

நேதாஜியின் படை வீரர்களில் ஒருவராக எண்ணும் வகையில் இன்றைய தினம் அமைச்சர் ஆர். எம். வீ, பேசுகிறார்.

நேதாஜியின் புகழுக்காக அரசே சில காரியங்களை செய்ய இருக்கும் போது ஏன் கோரிக்கைகளை கேட்பதுஎன்றுசொன்னேன் நண்பர்கள் விடவில்லை, கோரிக்கை வைத்தனர்

உலகத்துக்காகவேதன்னை அர்ப்பணித்துகொண்டவர் நேதாஜி.

இவ்வாறு மூக்கையாத் தேவர் பேசினார்,

பாண்டிச்சேரி துணைநிலை ஆளுநர் குல்கர்னி வாழ்த்து செய்தி அனுப்பியிருந்தார் சச்சிதானந்தம் அதனைப் படித்தார்.

## நெடுஞ் சேரலாதன் மகள் திருமணம்

வேலூர், பிப். 25- கழக முன்னணிப் பேச்சாளர்களில் ஒருவரான நெடுஞ் சேரலாதன் மகள் தமிழ்ச் செல்விக்கும், சி. நடராஜனுக்கும் திருமணம் நடந்தது. முதல்வர் புரட்சித் தலைவர் அமைச்சர்கள், சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர் பலர் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தனர்.

முகவரி
அ. தமிழ்ராசன்
69, ஆற்றுக்கிழக்குத்தெரு
(அப்சரா. பின்புறம்)
குகை சேலம்-6

### கலைக்குழு முகவரி

திருச்சி சாமி—சரளா
3-12, காந்திநகர், காட்டூர்,
திருச்சி-620 019.

# சிறுபான்மைமக்களின்பாதுகாவலர் புரட்சித்தலைவர்: நாஞ்சிலார்பேச்சு

சென்னை. பிப். 25 சிறுபான்மையினர் என்று கூறப்படுபவர்களின் பாதுகாவலராக முதல்வர் புரட்சித் தலைவர் விளங்குகிறார் என்று நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினார்.

தமிழ்நாடு, கதர், கிராமக் கைத்தொழில்வாரியத்தின் துணைத்தலைவராகபாளையங் கோட்டை எஸ். நாராயணனை புரட்சித்தலைவர் அரசு நியமித்துள்ளதைப் பாராட்டும் வகையில் கோகுலா ஓட்டலில் விழா நடைபெற்றது. சென்னை நகர சேனைத்தலைவர் மகாஜன சங்கத்தினர் இந்த விழாவை ஏற்பாடு செய்திருந்தனர்.

டைரக்டர் ஆர். கே. சண்முகம் அனைவரையும் வரவேற்றார் பி சோமசுந்தரம் தலைமைவகித்தார்.

நிதி அமைச்சர் நாஞ்சிலார் பேசும் போது சிறுபான்மை மக்களின் பாதுகாவலராகஅவர்கள்வளமும் முன்னேற்றமும் பெறுவதற்குஅரும் பாடுபட்டு வருகிறார் முதல்வர் புரட்சித் தலைவர். அதனால் தான் பாளை நாராயணனுக்குஇந்த பொறுப்பு வழங்கப்பட்டுள்ளது என்று கூறினார்.

அமைச்சர் ஆர். எம. வீ. பாளை நாராயணனைப் பாராட்டிப் பேசினார்

கே சி செட்டி, கே ஏ. சண்முகவேல், ஆர்பழனியப்பன், சரோஜா பழனியப்பன். ஆ திராவிடமணி எம் எல் சி ஆகியோர்பாளை நாராயணனைப்பாராட்டிப் பேசினர்.

சேனைத் தலைவர் மகாஜன சங்கம் சார்பில் தமிழக அரசுக்கு பாராட்டும் நன்றியும் தெரிவித்து தீர்மானம் ஒன்றை வே. இராசு படித்தார்.

'ஒரு மரத்துப் பறவைகள்' படத்தில் கே. கண்ணன், ஸ்ரீபிரியா.

# லதாவுக்கு ஆபத்து: ஜெய்கணேஷ் காத்தார்

மாடுமேய்க்கும் வாலிபன் ஒருவனை லதா விரும்பினார் இருவர் காதலும் கைகூடி மணமக்களாகும் வேளை நெருங்கிக்கொண்டிருந்தது காதலர் இருவரும் ஆடிப் பாடி மகிழ்ந்தார்கள். காட்டில் ஆடிப்பாடிக் கொண்டிருந்த லதாவை ஒரு கரடி பின்னால் வந்து தொட்டது. தன் காதலன் தான் தொடுகிறார் என்று பொய் கோபத்துடன் கையையெடுத்துபோட்டார்

ஆனால் கரடி திடீரென்று லதாவை சேர்த்துக்கட்டிக் கொண்டது லதா திரும்பிப் பார்த்து அலறினார். கரடியுடன் போராடினார்

லதாவின் காதலர் லதாவை காணாமல் ஓடி வந்து பார்த்தார். லதா கரடியுடன் கட்டிப்புரண்டு கொண்டிருந்தார். லதாவின் காதலர் ஓடிவந்து கரடியிடமிருந்து லதாவை காப்பாற்றினார்.

இக்காட்சி அபிராமி எண்டர்பிரைசஸ் 'ஞானக் குழந்தை' வண்ணப் படத்திற்காக ஆந்திராவில் உள்ள தடா காட்டில் படமாக்கப்பட்டது லதாவின்காதலராக ஜெய்கணேஷ் நடித்தார். லதாவை கரடி அடித்துக் கொல்லப் பார்த்தது தக்க சமயத்தில் ஜெய்கணேஷ் ஓடி வந்து லதாவை கரடியிடமிருந்து காப்பாற்றினார், மயிரிழையில் லதா உயிர் தப்பினர்.

இப்படத்தில் சுஜாதா, எஸ்.வி. சுப்பையா, பேபி சுதா, ஜெமினிகணேசன், நிர்மலா, ஜெயச்சித்ரா, ஆர். எஸ். மனோகர், நாகேஷ், மனோரமா, தேங்காய் சீனிவாசன் மற்றும் பலர் நடித்து வருகிறார்கள். ஒளிப்பதிவை மார்க்கஸ்பார்ட்லேகவனிக்கிறார் கே. வி. மகாதேவன் இசை அமைக்கிறார்.

கதை வசனத்தை இரா. பழனிச்சாமிஎழுதியுள்ளார் பி. எல். மோகன்ராம் தயாரித்து வரும் இப்படத்தை கே. காமேஸ்வரராவ் டைரக்ட் செய்து வருகிறார்.

# இரு நடிகர்கள் கடும் மோதல்

லட்சாதிபதி ஜம்புவைப் பார்க்க சோமு வருகிறான். ஜம்புவைப் பார்த்ததும் சோமுவுக்கு அவன் பழைய எதிரிதான் என்பது புரிகிறது ஒரு காலத்தில் சிறு பிள்ளையாக இருந்த தான் இப்போதுகொடுக்கு முளைத்த தேளாக மாறி ஜம்புவைகொல்லவந்திருப்பதாக சொல்கிறான்.

ஜம்பு அவனையாரென்று கேட்கிறான் பதினைந்து வருடங்களுக்கு முன்பு ஜம்புவால்கொல்லப்பட்ட பரமசிவத்தின் மகன்தான் என்று சொல்லுகிறான். தன்குடும்பத்தை சீரழித்தது போல இப்போதுஜம்புவை தான் பழிவாங்க வந்திருப்பதாகவும், அதற்கு பிள்ளையார் சுழியாக லட்சாதிபதி ஜம்புவுக்கு தெருவில்ஆடும் பெண்ணை மருமகளாக்கப் போவதாகச் சொல்கிறான். ஜம்பு இதை நடக்க விடமாட்டேன் என்றதும், நடத்திக் காட்டுகிறேன் என சோமு சவால்விடுகிறான்.

இந்தக்காட்சியில் சாமுவாக ஜெய்கணேசும், ஜம்புவாக அசோகனும் நடிக்க ஜெயவேல் புரொடக்ஷன்ஸ் ''ஒரு மரத்து பறவைகள்'', வண்ணப்படத்திற்காக பங்களா ஒன்றில் டைரக்டர் ரா, சங்கரன் இயக்கினார்ரங்கா படமாக்கினர்,

ஸ்ரீபிரியா இரட்டை வேடத்தில் நடிக்கும் இப்படத்தின் கதையை தாமு எழுத வசனத்தை கலைமணி எழுதுகிறார்.

## இரு நிலவுகள்

ஜி ஆர் பி. ஆர்ட்ஸ் தயாரித்துள்ள 'இருநிலவுகள்' வண்ணப்படம் மார்ச் மாதம் வெளிவருகிறது இந்தப் படத்தில் கமலஹாசன் இரட்டை வேடத்தில் நடிக்கிறார்.

ஜெயசுதா, ரோஜா ரமணி இருவரும் ஜோடியாக நடிக்கின்றனர்.

பாலு மகேந்திரா ஒளிப்பதிவை கவனிக்க, ராஜன் நாகேந்திரா இசையமைக்கின்றனர் ஆரூர் தாஸ் வசனம் எழுதுகிறார்.

சீனிவாசராவ் டைரக்ட் செய்கிறார். குருநாதம் தயாரிக்கிறார்.

## சுகுமார் நடிக்கும் முக்கனிகள்

மல்லிகை மலர் பிலிம்ஸ் 'முக்கனிகள்' என்ற பெயரில் படமொன்றைத்தயாரிக்கின்றனர். குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் ஏ கே அரங்கநாதன் தலைமையில் துவக்க விழா ஏ.வி.எம் ஸ்டுடியோவில் நடைபெற்றது.

எம் ஜி சி சுகுமார், ரீனா இணைந்து நடிக்கின்றனர். புலமைப்பித்தன் பாடல்களுக்கு சங்கர் கணேஷ் இசையமைக்கின்றனர்.

கதை வசனம் டைரக்ஷனை ஏ பி ஜெகதீஷ் கவனிக்கிறார்

'கண்ணே கண்மணியே' படத்தில் சிவாஜிகணேசன்

**ஜெய் சித்ரா பதில்கள் 4-3-79ல் வெளிவரும்**

எக்ஸ்-ரே

## CRAZY BOYS AND THE QUEEN'S NECKLACE

இங்கிலாந்து பிரதமர் டியூக் ஆப் பக்கிங்காம் பிரான்ஸ் அரசியுடன் காதல் கொள்கிறார். தனது தாயகத்தின் நினைவாக விலையுயர்ந்த வைரங்கள் பொருத்தப்பட்ட நெக்லசை இங்கிலாந்து டியூக் ஆப் பக்கிங்காம் அரசிக்கு அளிக்கிறார்.

ரிச்சிலு என்பவர் ஏற்கனவே அந்த அரசியை காதலித்து ஏமாந்தவர். பழி தீர்த்துக் கொள்ளத் துடிக்கிறார். நெக்லஸ் திருடப்படுகிறது. கொள்ளையரைப் பிடிக்க அரசிக்கு 4 பேர் துணை புரிகின்றனர். அவர்களது பேச்சுக்கள் சாகசங்கள் படம்பார்ப்போரை ரசிக்க வைக்கின்றன.

நெக்லஸ் கிடைக்கிறது, அரசி மனம் மகிழ்கிறார். வைர நெக்லஸ், ஒரு கடிதம், நெக்லஸ் மீட்புப் போராட்டம் இவற்றைப் பின்னிப் பிணைத்து படம் எடுக்கப்பட்டிருக்கிறது.

படத்தை ஆண்ட்ரிஹீன வெல்லி இயக்கியுள்ளார். கிறிஸ்டியன் பெனர் தயாரித்துள்ளார். லெக் சார்லட்ஸ், ஜோசஸ்பின் சாப்ளின், பால் பிரோ பாஸ்டு, பொனார்டுஹாலர், காதரின் ஜவுர் டான், கரீன் பீடர் சென் டேனியல் சக்கால்டி ஜேக்குஸ் செய்லர், ஜீன் மாரி பிரோஸ்லெர், பெர்னாடு, லஜா பிரிட்ஜ், ஆகியோர் நடித்துள்ளனர். மொத்தத்தில் சிரித்து மகிழலாம்.

## கேப்டன் மார்வல்

(ஆங்கிலம்)

புதைபொருள் ஆராய்ச்சியில் ஈடுபடும் சிலருக்கு அற்புதமான பொருள் ஒன்று கிடைக்கின்றது. தேள் உருவில் உள்ள அந்தப் பொருளில் உள்ளலென்ஸ்களை சரியான படி பொருத்தினால் கல்லைப் பொன்னாக்கமுடிகிறது கடும் பாறையையும் உருக்க முடிகிறது! அதில் உள்ள லென்சுகளை ஒவ்வொருவரும் ஆளுக்கு ஒன்றாக வைத்துக் கொள்கின்றனர்.

ஆசை வெறியாகிறது! எல்லா லென்ஸ்களையும்பறிக்க பலர் முயற்சிக்கின்றனர் லென்ஸ்களை எதிரிகளிமிருந்து காப்பாற்ற உருமாறுசக்தி கொண்ட கேப்டன்மார்வல் அவர்கள் மத்தியிலேயே இருக்கிறான், அவன் வானத்தில் பறக்கிறான் - அபார வலிமை பெற்றவனாக இருக்கிறான் எதிரிகள் அவனிடம் படாத பாடு படுகின்றனர்.

சண்டைக்காட்சிகளுக்கு குறைவில்லைவிறுவிறுப்பாக படம் செல்கிறது குழந்தைகள் மிகவும் விரும்புவார்கள் பாரகனில் நடக்கிறது

-நாகை தருமன்

'நினைத்தாலே இனிக்கும்' படத்தில் கமலஹாசன், ஜெயப்பிரதா.

# சேதி தெரியுமா?

## தயாரிப்பாளர் நடித்தார்

கருடா பிலிம்ஸ் தயாரிக்கும் 'ஒப்பந்தம்' வண்ணப் படத்தில் தயாரிப்பாளர் என் ஆர் அமுதா தயாரிப்பாளர் வேடத்தில் நடிக்கிறார் ஜெமினிகணேசன் டைரக்டராகவும் ஸ்ரீபிரியா நடிகையாகவும் நடிக்கின்றனர். கதை வசனம் டைரக்ஷனை விஜய கணேசன் கவனிக்கிறார்.

## கலையுலகில் ஒரு சின்ன தேவர்

கலையுலகில் குறிப்பிட்ட காலத்தில் படத்தைத் தொடங்கி முடிப்பது நடிப்பவர்களுக்கும் மற்ற கலைஞர்களுக்கும் சொன்ன வார்த்தை தவறாமல் பேசியபணத்தை குறிப்பிட்ட நாளில் கொடுப்பதில் சின்னப்ப தேவர் முன்னணியில் நிற்பவர். அவருக்கிணை அவர் தான் என்று பல கலைஞர்கள் சொல்லக் கேட்டிருக்கிறோம்.

இப்போது இளையதலைமுறையில் சின்ன தேவரை நினைவு கூரும் வகையில் ஒருசின்ன தேவர் தயாரிப்பாளராகஉள்ளார்

மகாலட்சுமி ஆர்ட்ஸ் தயாரிக்கும் 'மங்கல லட்சுமி' படத்தை கதை வசனம் எழுதி தயாரித்து வருபவர் திருச்செந்தூர் கே மாரிமுத்து.

இந்தப் படத்தில் நடிக்கும் சங்கீதா, பிரேம் ஆனந்த், ஷைலஜா ஆகியோர் தயாரிப்பாளர் கே மாரிமுத்துவின் சுறுசுறுப்பையும், சொன்ன சொல் தவறாத தன்மையையும் குறிப்பிட்டு 'இவர் ஒரு குட்டிதேவர்' என்றனர்.

நட்சத்திரங்கள் உதவி கிடைத்தால் 15 நாட்களில் ஒருபடத்தைஎடுத்து முடிப்பேன் என்று மாரிமுத்து கூறுகிறார். அப்படி ஒரு படத்தை ஏப்ரல் 14 ஆம்தேதி தொடங்கி முடிக்கப் போவதாகவும், தான்நேர்மையாகநடப்பதை போலவே தன்னிடம் மற்றவர்கள் நேர்மையாக நடக்க வேண்டுமென்று எதிர்ப் பார்ப்பதாகவும் கூறுகிறார்.

## ஆர். கே. சண்முகம் நடித்துள்ளார்

சின்னவர் கிரியேஷன்ஸ் தயாரிக்கும் 'பாப்பாத்தி' படத்தில கதாசிரியரும், டைரக்டருமான ஆர். கே. சண்முகம் நடிக்கிறார்.

பி. ஆர். பந்துலுவிடம் உதவி டைரக்டராக பத்மினி பிக்சர்சில் பணியாற்றிய போது 'சபாஷ்மீனா' போன்ற பல படங்களில் ஆர். கே. சண்முகம் நடித்துள்ளார்.

இப்போது 'பாப்பாத்தி' படத்தில் கதை நாயகியை அறிமுகப்படுத்தும் காட்சியில் தோன்றி நடிக்கின்றார்

## எஸ். வி. சேகர் நடிக்கும் படம்

கலா தர்ஷன் புதுமையான தலைப்பைக்கொண்ட படம் ஒன்றை உருவாக்கி வருகின்றனர்

இந்தப் படத்தின் பெயர் 24C வேதபுரம் முதல்வீதி, சோம சுந்தரேசுவர் கதை வசனம் எழுதுகிறார். ஜெயபாரதி டைரக்ட்செய்கிறார்

பிரியவதனா, எஸ். வி. சேகர், ஜெயபாரதி, டெல்லி கணேசன், ராஜி ஆகியோர் நடிக்கின்றனர்.

கங்கை அமரன் பாடல்களுக்கு இளையராஜாஇசையமைக்கிறார்.

'இனிக்கும் இளமை' படத்தில் ராதிகா.

## கவிஞர் காமராசன் பாடல் பதிவு

இதோ இதோ ஒரு காதல் கதை
இரு விழி எழுதும் போதைக்கதை

எனத் துவங்கும். கவிஞர் நா காமராசன், எழுதிய பாடல் 'எனக்கொரு காதலி இருக்கின்றாள்' என்ற படத்துக்காகப் பதிவானது.

ஜெயச்சந்திரனும், சசிரேகாவும் பாட குன்னக்குடி வைத்தியநாதன்இசையமைத்துள்ளார்.

இந்தப் பாடல் காட்சி ஏவி:எம். ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது.

## ஜெயலலிதா நடித்தார்

இந்தக் காட்சியில் ஜெயலலிதாவும், சாதயாபுவும் நடித்தனர்.

ஏ. ஜெகந்நாதன் டைரக்ட் செய்தார்.

'ஒரே வானம் ஒரே பூமி' படத்தில் அமெரிக்க நடிகர் மார்ஷ்லே.

## பகலில் எரியும் விளக்குகள்

கலையரசு பிலிம்சார் 'பகலில் எரியும் விளக்குகள்' என்ற பெயரில் படம் ஒன்றைத் தயாரித்து வருகின்றனர்.

டி. டி. அரசு கதை வசனம் எழுத, இளையபாரதி டைரக்ட் செய்கிறார். எம். எல். ஸ்ரீகாந்த் இசையமைக்கிறார். வெங்கடேஷ் ஒளிப்பதிவு செய்கிறார்.

ரவிச்சந்திரன், சங்கீதா, ஸ்ரீராஜ், விஜயமாலினி, ஸ்ரீலேகா, மேஜர் சுந்தர்ராஜன், எஸ். ரஜினி, அஞ்சலி தேவி, கன்னிமாறன் மற்றும்பலர் நடிக்கின்றனர்

## தொடுவானம்

அமுதவல்லி பிலிம்சார் 'தொடுவானம்' என்ற பெயரில் வண்ணப்படம் ஒன்றைத்தயாரிக்கின்றனர்

சுமித்ரா, ஹேமாசவுத்ரி, மேஜர் சுந்தர்ராஜன். சுருளிராஜன், ராஜேஷ், ரங்கமணி உசிலைமணி, ஜஸ்டின் மற்றும் பலர் நடிக்கின்றனர்.

ஏ. கணேஷ் கதை எழுதுகிறார். சங்கர் கணேஷ் இசையமைக்கின்றனர். எம்.எம். முனியப்பா, ஏ. கணேசன் ஆகியோர் தயாரிக்கின்றனர்,

கே.எஸ். ராஜா வசனம் எழுதி டைரக்ட்செய்கிறார்

## சிவாஜிகணேசன் நடிக்கும் திசைகள் திரும்பும்

எஸ். எஸ் கே. பிலிம்ஸார் தங்களின் மூன்றாவது தயாரிப்பாக, 'ரிஷிமூலம்' நாடகத்தை 'திசைகள் திரும்பும்' என்ற பெயரில் வண்ணப்படமாக உருவாக்குகிறார்கள். சிவாஜி கணேசன், கே. ஆர். விஜயா இணைந்து நடிக்கும் இப்படத்தின் கதை வசனத்தை மகேந்திரன் எழுதுகிறார்.

எஸ் பி முத்துராமன் டைரக்ட் செய்கிறார். இந்த வண்ணப்படத்தின் ஒளிப்பதிவை பாபு கவனிக்கிறார். கவியரசு கண்ணதாசன் பாடல்களுக்கு இளையராஜா இசை அமைக்கிறார்.

அருப்புக்கோட்டை எஸ் எஸ். கருப்பசாமி தயாரிக்கிறார்.

## பெண்ணாக பிறந்தாலே

(நாடகம்)

மூவிமேக்கர்ஸ் அளிக்கும் 'பெண்ணாகப் பிறந்தாலே' என்ற தமிழ் சமூக நகைச்சுவை நாடகத்தின்தொடக்க விழா சென்னை மத்திய நூலகக் கட்டிடத்தில்நடைபெற்றது.

மூவிமேக்கர்ஸ் எஸ்.ராதா கிருஷ்ணன் க்ளாமர் கிருஷ்ணமூர்த்தி வரவேற்றனர். த. நா. லட்சுமிபதி குத்து விளக்கு ஏற்றி தொடங்கி வைத்தார், கலை உலகப் பிரமுகர்களும் பத்திரிகை ஆசிரியர்களும்கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கினார்கள்.

டபிள்யூ. ராமசாமி, ம சண்முகப்பிரியன், சிவகுருநாதன், கார்கி கே.வி. டி மகேஷ், ராதாகிருஷ்ணன் ஜெயந்தி, ப்ரியா-பானுமதி, ஜெயந்திமற்றும்பலர் நடிக்கின்றனர்.

கதை, வசனத்தைதிரைபட இயக்குநர் கே. வெங்கட்ராமன் எழுதுகிறார். மூவிமேக்கர்ஸ் எஸ். ராதா கிருஷ்ணன் தயாரித்து இயக்குகிறார்.

ஞானக் குழந்தை

அனு

'ஞானக் குழந்தை' படத்தில் மஜயசுதரா.

# மக்கள் திலகம் நடித்த படம்தான் பார்ப்பேன்: ஸ்ரீபிரியா கூறுகிறார்

மதுரையில் மீனாட்சி என்றஏழைப்பெண். தினந்தோறும் தேவி மீனாட்சிக்கு பூச்சாத்தி அவளின் திருவுருவை தெருக்களிலே கோலமாகப்போட்டுஅதன் மூலம் வரும் வருவாயில் தன்வயிற்றை நிரப்பிக் கொள்வாள். பாவம் அவள் ஒரு ஊமை.

ஊமைமீனாட்சிக்கு உற்ற துணை அவள் கையிலே தவழும் ஒரு கிளிதான். அதுதான் மீனாட்சியின் உணர்ச்சிகளை உலகுக்கு எடுத்துக் கூறி அவளின் நாக்காகவே இருந்துவந்தது.

மதுரையில் பயாஸ்கோப் பெட்டியுடன் ஒரு வாலிபன் வசித்து வந்தான், மக்கள் திலகம் எம்.ஜி ஆர். சிவாஜி நடித்த சினிமாக்களை காட்டி வயிறுவளர்த்து வந்தான்.

ஊமை மீனாட்சி பயாஸ்கோப் பார்க்க ஆசைப்பட்டாள். கிளியிடம் ஊமை மொழியில் ஜாடை காட்டினாள், கிளியும சம்மதித்தது பயாஸ்கோப் காட்டும வாலிபனிடம் ஊமை மீனாட்சி கிளியுடன் வந்தாள்.

''என்னசினிமாபார்க்கப் போறீங்க? வாத்தியார் எம். ஜி. ஆர். நடித்த சினிமாவா? நடிகர் திலகம் சிவாஜி நடித்தசினிமாவா? எது வேண்டும்'' என்று கேட்டான்.

கிளி மீனாட்சியை பார்த்தது மீனாட்சி கிளியிடம் ஜாடை காட்டினாள் கிளி புரிந்துகொண்டு 'வாத்தியார் எம் ஜி ஆர் நடித்த படம் தான் பார்ப்போம் என்றது சரி என்று பயாஸ்கோப காட்டினான் பயாஸ்கோப் பார்த்துக்கொண்டிருந்த மீனாட்சியும் கிளியும் ஒவென்று கத்தினர் 'மோசக்காரா! வாத்தியார் எம்.ஜி; ஆர் படம் என்று சொல்லி வீரபாண்டிய கட்டபொம்மனில் சிவாஜி நடிக்கும் சினிமாவை காட்டுறியே' என்று கிளி திட்டியது

''மன்னிச்சுக்குங்க ரீல் தப்பா போட்டுட்டேன்' இப்போது வாத்தியார் நடித்தபயாஸ்கோபபோடுறேன்பாருங்க 'என்றுகாட்டினான்.

மீனாவும் கிளியும் வாத்தியார் நடித்த பயாஸ்கோப்பை பார்த்தார்கள்

இக்காட்சி ஸ்ரீதேவி பிரியா பிலிம்சாரின் வேலும் மயிலும் துணை வண்ணப் படத்திற்காக மதுரையில் படமாக்கப் பட்டது.

ஊமை மீனாட்சியாக ஸ்ரீபிரியாவும், பயாஸ்கோப் காட்டும் வாலிபனாக விஜயகுமாரும் நடித்தார்கள் கிளி ஒன்று அழகாகப் பேசி அற்புதமாக நடித்து வருகிறது.

இதன் கதையை இராம நாராயணன் எழுதியுள்ளார். வசனத்தை ராஜசேகரும், ஒளிப்பதிவை எம் கே விஸ்வநாதனும் கவனிக்கிறார்கள்.

இராம நாராயணனும் விஜயலட்சுமி சுப்பிரமணியமும் தயாரிக்கிறார்கள் இதன் திரைக்கதை டைரக்ஷனை ரா சங்கரன் கவனிக்கிறார்.

'என்னடி மீனாட்சி' படத்தில் சிவகுமார், லாவண்யா.

'அழகே உன்னை ஆராதிக்கிறேன்' படத்தில் லதா, விஜயகுமார்.

அண்ணா





தாயகம் திரும்பியோர் மறுவாழ்வு மாநாடு:

# மத்திய அமைச்சர்கள் பி.சி.சுந்தர்-பக்த்துடன் பி. டி. எஸ். சந்திப்பு

புதுடெல்லி, பிப்.25—மத்திய அமைச்சர்கள் டாக்டர் பி சி சுந்தர், சிக்கந்தர் பக்த்துடன் தமிழக அமைச்சர் பி. டி. எஸ். சந்தித்துப் பேசினா தாயகம் திரும்பியோரின் மறுவாழ்வு மகளிர் நலம் குறித்து பல்வேறு பிரச்சினைகளை அவர்கள் விவாதித்தனர்.

புதுடெல்லி சென்று தமிழக சமூக நலத்துறை தாயகம் திரும்பியோா மறுவாழ்வு நலத்துறை அமைச்சர் பி. டி. எஸ். மத்திய அமைச்சர்கள் சிக்கந்தர் பக்த், டாக்டர் பி. சி. சுந்தர் இருவரையும் சந்தித்துப் பேசினர் சந்திப்பின் போது பல்வேறு பிரச்சினைகள் குறித்து அவர்கள் விவாதித்தனர்,

வரும் ஏப்ரல் மாதம் 19, 20 ஆகிய இருநாட்களும் பெங்களூரில் மத்திய தாயகம திரும்பியோர் மறுவாழ்வுத்துறை அமைச்சர் சிக்கந்தாபக்த் தலைமையில் தென் மாநில

முதலமைச்சர்கள் மற்றும் தாயகம் திரும்பியோர்மறுவாழ்வுத்துறை அமைச்சர்கள் மாநாடு நடைபெறுகிறது.

ஏப்ரல் மாதம 21, 22 ஆகிய இருநாட்களிலும் சென்னையில் மத்திய கல்வி அமைச்சா டாக்டர் பி. சி. சுந்தா தலைமையில் மகளிர் மாநாடு நடைபெறுகிறது. இந்த மாநாட்டில் ராஜாங்க அமைச்சர் ரேணுகாதேவியும் கலந்து கொள்கிறார்.

மத்திய அமைச்சர்களுடன் தமிழக அமைச்சர் பி.டி.எஸ். சந்தித்துப் பேசிய போது இந்த முடிவுகள் எடுக்கபபட்டன.

## மத்திய பொதுப் பணித்துறை
### சென்னை

நிர்வாகப்பொறியாளர், சென்னை மத்தியடிவிஷன் எண் I, மத்திய பொதுப் பணித்துறை, சாஸ்திரி பவனம், சென்னை 6, அவர்களால் காரைக்காலில் CWR-RW கட்டிடம் கட்டும் வேலைக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் 1-3-79 மாலை 3 மணிவரை வரவேற்கப்படுகின்றது. SH. இணைப்புச்சாலை (Approach Road)கட்டுதல் ரூ. 21,213. டெண்டர் பத்திரங்கள் இந்த அலுவலகத்திலிருந்தும், மற்றும் துணைப்பொறியாளர் பாண்டிச்சேரி, மத்தியதுணை டிவிஷன், மத்தியப்பொதுப் பணித்துறை பாண்டிச்சேரி அவர்களிடமிருந்து ஒவ்வொரு செட்டுக்கும் வி. வரி சேர்த்து ரூ. 20.80 செலுத்தி (திரும்பப்பெற இயலாது) 28-2-79 தேதி வரை பெற்றுக்கொள்ளலாம்.

davp 635 2462/78





# நாவலர் சவால்..

(முதல் பக்கத் தொடர்ச்சி)

வெற்றி பெற்ற தற்கு கவர்ச்சி தான் காரணம் என்று கருணாநிதி சொல்லி வருகிறார்.

கருணாநிதியை ஆதரித்து தஞ்சைதிலகர்திடலில் லட்சக்கணக்கானமக்களிடையே இரவு 2 மணிக்கு புரட்சி தலைவர்பேசினா கருணாநிதி வெற்றியும் பெற்றார். அப்போது கவர்ச்சி இல்லையா?

1971ம் ஆண்டு சைதாப்பேட்டை தொகுதியில் கருணாநிதி போட்டியிட்டபோது தேரடி திடலில் இரவு 12 மணிக்கு ஆதரவாக பேசி ஓட்டுக்கேட்டாரே! அப்போது கவர்ச்சி இல்லையா?

மேகலா பிக்சர்ஸ் நிறுவனம் 7 லட்சம்ரூபாய் கடனாளியாக ஆனபோது புரட்சித்தலைவரை கெஞ்சி கேட்டுக்கொண்டதால் 'எங்கள் தங்கம்' படத்தில் நடித்துக்கொடுத்தார் செலவு போக நிகரலாபம் 9 லட்சம் ரூபாய் வந்தது கடன்போக 2 லட்சம் ரூபாயை பெட்டியில் வைத்துக் கருணாநிதி பூட்டிக் கொண்டாரே அப்போது கவர்ச்சி தெரியவில்லையா?

சான்பிரான்சிஸ்கோவில் ஒரு நடிகர் கவர்னராக வந்தார் மாஸ்கோவில் ஒருநடிகர் அமைச்சராக வந்தார். அடுத்து ஆசியா கண்டத்திலேயே புரட்சித் தலைவர் ஒருவா தான்முதல்வராக வரமுடிந்தது.

நடிகர்தானே என்று கருணாநிதி சொல்லி வருகிறார். 25 வயதான அனைவரும் சட்டமன்ற உறுப்பினர்களாக ஆகமுடியும் ஆனல் அனைவருமே நடிகராக முடியாது. நடிக்கிறவர்கள்எல்லோரும் புரட்சித் தலைவராக முடியாது. அப்படி எல்லோருமே புரட்சித்தலைவரைப்போல பாராட்டுப் பெற முடியும் என்றால் கருணாநிதி உருவாக்கிய நடிகர் என்ன ஆனார்?

## வைரநெக்லஸ் குற்றச்சாட்டு

என்னைப் பார்த்து 'வைர நெக்லஸ் அங்கிள்' என்று கருணாநிதி சொல்லி வருகிறார்.

1950ம் ஆண்டு கீழக்கரையில் உள்ள ஒரு முஸ்லிம் பள்ளியை குமாரசாமி ராஜா ஆட்சி காலத்தில் முஸ்லிம் சமுதாயம் அரசிடம் ஒப்படைத்தது. ஒப்படைக்கும்போது சமுதாயத்தின் நிதிநிலை சரியாகும்போது சமுதாயம் கேட்கும்போது திருப்பிக் கொடுக்க வேண்டும் என்ற ஒப்பந்தத்தில் அளித்தனா

1970ம் ஆண்டு காயிதே மில்லத் முகமது இஸ்மாயில்; அப்துல் சமது, காஜா மொய்தீன் ஆகியோர் உட்பட 11 பேர் டைரக்டர்கள் கொண்ட குழு என்னை சந்தித்து அந்த பள்ளியை திரும்பக் கேட்டார்கள்.

ஒருஉயர்நிலைபள்ளிஆரம்பிக்க வேண்டுமானல் அரசுக்குஒருலட்சரூபாய்கட்ட வேண்டும் என்று சொன்னேன், கட்டுகிறோம் என்றனர். அவர்களின் மனுவை கல்விதுறைக்கு அனுப்பினேன். துறை ஆராய்ந்து பள்ளிக்கூடத்தைத் திருப்பித்தரலாம் என்றது. திருப்பிதந்தோம்.

## காயிதே மில்லத் லஞ்சம் தருபவரா?

இதற்குள் முருகானந்தம் என்ற கம்யூனிஸ்டுகாரர் "லட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள வைர நெக்லசை பெற்றுக் கொண்டு நெடுஞ்செழியன் இதை செய்தார்" என்று செய்தி வெளியிட்டார். பேரறிஞர் அண்ணாவுக்கு நிகரான காயிதே மில்லத் லஞ்சம் கொடுப்பவரா என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டாமா?

செய்தி வெளியிட்ட 10வது நாள் மான நட்டம் கேட்டு வழக்கு தொடர்ந்தேன் அந்த செய்திக்காக 10 லட்ச ரூபாய் கேட்டு வழக்கு போடமுடியும் என்றாலும் பணத்தாசை இல்லாமல் என் மீது பொய்யாக சாட்டப்பட்டுள்ள களங்கம் துடைக்கப்பட வேண்டும் என்பதற்காகலட்ச ரூபாய் கேட்டு வழக்குத்தொடர்ந்தேன்.

1974ம் ஆண்டு நீதிமன்றத் தீர்ப்பில் நெடுஞ்செழியன் உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர் அவர் லஞ்சம் வாங்கியது நிரூபிக்கப்படவில்லை லஞ்சம்வாங்கியதாக எழுதியது தவறு, கல்யாணசுந்தரமும் முருகானந்தமும் ஒரு லட்சம் ரூபாய் நட்ட ஈடு தரவேண்டும் என்று நீதிபதி மோகன் தீர்ப்பு கூறினர்.

## பகிரங்க மன்னிப்பு

பின்னர் அவர்கள் மேல் கோர்ட்டுக்குச் சென்றனர் வழக்கு நடந்து கொண்டிருக்கும்போது தூத்துக்குடியில் நான் ஒரு பொதுக்கூட்டத்தில் கலந்து கொள்ளச் சென்றிருந்தேன் அப்போது முருகானந்தம் மேடைக்கு வந்து மாலை அணிவித்து "உங்களைப் பற்றி எழுதியதற்காக நான் பகிரங்கமாக மன்னிப்பு கேட்கிறேன். எழுதியும் தருகிறேன். தயவுசெய்து வழக்கை வாபஸ் வாங்கிக் கொள்ளுங்கள்" என்றார்.

எனது வழக்கறிஞரிடம் அவர்எழுதிக்கொடுத்ததை கோர்ட்டில் காட்டி வழக்கை வாபஸ் பெற்றுக் கொள்ளச் செய்தேன்

கோர்ட்டில் நான்வழக்கு தொடர்ந்தது தூய்மையானவன் குற்றமற்றவன் என்பது நிரூபிக்கப்படவேண்டும் என்பதற்காகத்தான். எனது நோக்கம் பணமல்ல.

கருணாநிதிமீதுகோதுமை பேர ஊழல், பூச்சி மருந்து தெளிப்புஊழல், வீராணம் ஊழல் என்றெல்லாம் கூறி வருகிறோமே, அவரால் எதிர்த்துவழக்குத்தொடர முடியுமா?

## தர்மா வீட்டில் சோதனை

அளவிற்கு அதிகமான நகை இருந்ததாக நெருக்கடி காலத்தில் சோதனையிட்டது என் வீட்டில் அல்ல, தர்மாவின் வீட்டில் சோதனையிட்டு தாமாவை அரை நிர்வாணமாக்கி நகைகளை எடுத்துச் சென்றதாக முரசொலியில்தானே எழுதினர்கள்? நெருக்கடி காலத்தில் தி.மு.க. வில்தானே இருந்தேன்? இந்திராவுக்கு என் மீதா சந்தேகம் வந்தது?

நான் கருணாநிதிக்கு எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன் என்னை துரோகி என்றார் ஒழிக என்றார்ஒழிந்தேன்புரட்சித் தலைவர் என்னை உயரத்தில் உட்கார வைத்து விட்டார்.

கருணாநிதி தன்னை நல்லவர் என்று காட்டிக் கொள்ளஅரசியல்வாய்ப்பே இல்லை. பணவசதியில் தி.மு.க. முதலிடத்துக்கு வந்து விட்டது, காங்கிரஸ் 2வது இடத்துக்கு வந்து விட்டது. அந்த அளவுக்கு கருணாநிதி கட்சியை வளர்த்து வைத்திருக்கிறார்

## விளம்பரப் பிரியர் யார்?

கருணாநிதி இப்போது புரட்சித் தலைவரைப் பார்த்து விளம்பரப்பிரியர் என்று சொல்லுகிறார். குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தில் விளம்பரப் பலகையில் கருணாநிதியின் படத்தை போட்டு 'நாம் இருவர் நாம் பெறுவதும் இருவர்' என்று எழுதினாகளே அது விளம்பரம் அல்லவா?

ஓராண்டு ஆட்சியின் சாதனைகளை விளக்கும் வகையில் திட்டத்தைப் பற்றி எல்லா பத்திரிகைகளுக்கும் விளம்பரம் தந்தார் புரட்சித் தலைவர் அதில் கூட 'அண்ணாவின் கொள்கைகள் நிறைவேறுகின்றன' என்று தான் போட்டார். தன்னுடைய பெயரை போட்டுக் கொள்ள வில்லை.

## திட்டும்-துட்டும்

அந்த விளம்பரம் முரசொலியில்கூட வெளிவந்தது அந்தப் பத்திரிகையில் முதல் பக்கம் 2வது, 4வது பக்கத்தில் அரசை திட்டி இருக்கிறார்கள்3வது பக்கத்தில் அரசின் சாதனைகளை போட்டிருக்கிறார்கள். ஏனென்றால் ஒரு பக்க விளம்பரத்திற்கு 3 ஆயிரம் ரூபாய் 1,2,4-வது பக்கங்களில் திட்டு 3 வதுபக்கத்தில் துட்டு

(பலத்த சிரிப்பு)

இதிலிருந்து கருணாநிதி பணம் என்றால் எதுவும் செய்வார் என்பது நன்றாக தெரிகிறது.

(கைத்தட்டல்)

பேரறிஞர் அண்ணா அவர்கள் திராவிட நாடு பத்திரிகை நடத்தியபோது காங்கிரஸ் அரசு கொடுத்த விளம்பரங்களை தனது கொள்கைக்கு எதிராக என்றைக்காவது போட்டதுண்டா?

ஒரு நாட்டை நல்ல சட்டம் ஆள்வதைவிட நல்ல மனிதா ஆள்வதுமேல்என்று 2 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கிரேக்க அறிஞன் குறிப்பிட்டான்.

அந்த வகையில் புரட்சித் தலைவர்தமிழகத்தைஆட்சி செய்து வருகிறார். வரும் தேர்தல்களில் அவருக்கு மக்கள் தங்கள் ஆதரவை தரவேண்டும்.

இவ்வாறு டாக்டர் நாவலர் கூறினர்.

மேற்கு மத்திய பட்டதாரி தேர்தல்:
ஊராட்சி பட்டதாரி

## ஆசிரியர்கள் சங்கம் ஜனார்தனத்தை ஆதரிக்கும்

சென்னை, பிப், 25--தமிழ்நாடு ஊராட்சி ஒன்றிய பட்டதாரிகள் ஆசிரியர் சங்கம் தமிழ்நாடு மேற்கு பட்ட தாரிகள் தொகுதிக்கு போட்டியிடும் கழக மாணவர்பிரிவு செயலாளர் இரா ஜனார்த்தனத்துக்கு ஆதரவு தெரிவித்துள்ளார்.

சங்க மாநில தலைவர் தூ. ப. ரகுபதி வெளியிட்ட ஒரு அறிக்கையில் இரா ஜனார்தனத்தை ஆதரிக்கவும்அவருக்கு ஆதரவு திரட்டவும் சங்கம் முடிவுசெய்துள்ளது என்று கூறியுள்ளார்

## அமைச்சர் ஆர். எம். வீ.

பிப், 27 - திண்டுக்கல் தாண்டிக்குடி, பெருமாள் மலை,







தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை சென்னை600004, ஆசிரியர்: எம்.ஜி.சக்ரபாணி